

வண்ணமருள்கொள் அணி மேகவண்ணா மாயவம்மானே!
எண்ணம் புகுந்துதித்திக்கும் அமுதே இமையோர் அதிபதியே
தெண்ணல் அருவி மணிபொன் முத்தலைக்கும்
திருவேங்கடத்தானே!
அண்ணலே உன்னடிசேர அடியேற்கு ஆவா என்னாயே.

(அருளே வடிவெடுத்த வண்ணமாய் அழகிய மேகம்போன்ற நிறம் உடையவனே, ஆச்சரிய குணங்களை உடைய சுவாமியே, நெஞ்சுக் குள்ளே புகுந்து ரசிக்கும் அமுதம் போன்றவனே, தேவாதி தேவனே, தெளிந்த, அழகிய அருவிகள் யாவும் மணிகளையும், பொன்னையும், முத்துக்களையும் அடித்துவரும்படியான திருமலையில் வாசம் செய்ப வனே, தலைவனே, உன்திருவடிகளைக் காணும்படி, என்னிடம் 'ஐயோ' என்று மனம் இரங்கி அருள வேண்டுகிறேன்.)

--(திருவாய்மொழி - 6-10-3)

ஸப்தகிரி

ஜனவரி - 1995


தனிப்பிரதி ரூ. 2
வருடச்சந்தா ரூ. 24

மலர் 25
இதழ் 8



சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ ஆண்டாள் - சித்திரம் : கே. ஜெகதீஷ்.

முதல் உள்ளட்டை : சுவாமி விவேகானந்தர்

2-வது உள்ளட்டை : பொங்கல் திருநாள் - கே. ஜெகதீஷ்

பின்னட்டை : திருமலை அடிவாரம் - அலிபிரி

JAGADISH

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கயத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்ளையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

**சலுகைகள் :**

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப் படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. 15,000

### விருக்ஷ பிரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

**சலுகைகள் :**

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

**சலுகைகள் :**

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 2000

### வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிவை பாதுகாத்து மேம்படுத்தப்படும்.

**சலுகைகள் :**

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக் கப்படும்.
* ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 1000

### அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக்கப்படும்.

**சலுகைகள் :**

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 500

### விருக்ஷ தத்தத

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள்ளப்படும்.

**சலுகை :**

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 250

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# உங்களுடன்....

பன்னிரண்டு ராசிகளில் சுற்றிவரும் சூரியபகவான் தனுர் ராசியை விட்டு மகர ராசியை அடையும் திருநாளை 'மகர சங்கராந்தி' என்றும் 'தைப் பொங்கல்' என்றும் அழைத்திடுவர். அந்நாளே 'உத்தராயன'த்தின் தொடக்க நன்னாளாகக் கொண்டாடப்பட்டு, அதுவே உலக மேன்மைக்கும் இட்டுச் செல்லும் புனித நாளாகக் கருதப்படுகிறது. அத்திருநாளுக்காகவே காத்திருந்து தம் ஆவியைத் துறந்தவர் பீஷ்மாச்சாரியார். அத்தகு பெருமைமிகு திருநாளன்று, உலக உயிர்கள் வளரவும் வாழவும் செய்திடும் சூரியனுக்கு நன்றிக்கடன் மக்களால் அன்று சிறப்பாக அவனை வழிபடுவதன் மூலம் காட்டப்படுகிறது. அத்தகு திருநாளன்று இந்திய மண்ணின் பெருமையினை அவனி போற்றிடும் முரசொலியாக இந்து சமயத்தின் சிறப்பினைப் பார் புகழ்ந்திடும் வகையில் இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரமாக ஒரு விடிவெள்ளி பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் இப்பாரத மண்ணின் கலாசார நிலைக்களமான வங்கத்தில் தோன்றிற்று. அப்பெருஞ் சுடர் ஒளிர்ந்த காலம் சிறிதேயாயினும், அப்பேரொளி ஒரு இயக்கம் வளர வழிகாட்டியது. ஆம் அப்பெருமைமிகு இயக்க நாயகன் 'சிகாகோ செந்துறவி' சுவாமி விவேகானந்தர் அவர்கள்தாம்.

வாழ்ந்த ஆண்டுகள் நாற்பதுக்குள்ளேயாயினும் இறுதிப் பத்தாண்டுகளில் தன் பிறவியின் நோக்கத்தை, இவ்வுலகம் பயனுறும் வகையில், உணர்த்திக் காட்டிய அவர்தம் வாழ்க்கைநெறி மானிட இனம் மாண்புறும் வகையில் திகழ்ந்தது. இந்திய மண்ணில் பிறந்தமைக்குப் பெருமைகொண்ட அவர், பிற சமயக்கருத்துக்களை இகழாமல், பிற சமயத்தாரை புண்படுத்தாமல், அச்சமயங்களின் பெருமையினைக் கூறிக்கொண்டே, இந்து சமயத்தின் சிறப்பினை, அதன் தனித்தன்மையினை, இந்திய வேதாந்தத்தின் விழுமிய கருத்துக்களின் ஆற்றலை உலகுக்குணர்த்திய அவர்தம் திறமை போற்றதற்குரியது. எல்லா உயிர்களுக்கும் மதிப்பளித்த மாண்பு, உலக மக்களை உடன்பிறப்புகளாக ஏற்றுக்கொண்ட சீர்மை, அரசியல் வாடை சிறிதும் இல்லாத, தனிமனித மேம்பாட்டுக்காகப் பின்பற்றிய அவர்தம் அணுகுமுறை, பற்றற்ற பரந்த மனப்பான்மையின் பின்னணியில் பின்பற்றிய அவருடைய செயல்பாடுகள் போன்றவை அவரை ஒரு 'வேதாந்தவிளக்காக' ஒளிரச்செய்தது.

'நான் நாற்பது வயது தாண்டமாட்டேன்' என்று கூறியபோது, 'ஏன்' என்ற கேள்விக்கு அவர்தம் "மாபெரும் மரத்தின் நிழலில் பிற செடிகள் வளர்ந்து வளரமாட்டா' எனும் பதில் தான் பெற்ற வாய்ப்பினை மற்றவர்களும் பெற வேண்டும் எனும் அவர்தம் பரந்த மனப்பான்மையையும், தன்னால் பிறர் பெற்ற பயன் மற்றவர்களாலும் பெற வேண்டும் என்ற அவர்தம் தியாக மனப்பான்மையையும், மற்றர்களின் வளர்ச்சியின்பால் அவர் கொண்டுள்ள அன்புள்ளத்தையும் படம் பிடித்துக்காட்டியது மட்டுமல்லாமல், இன்றைக்கும் துறைபோகிய பலருக்கும் ஒரு அறிவுரையாகவும் விளங்குகிறது. உலகத்தின் பிற சமயங்கள் சமுதாயத்தைச் சீர்திருத்தவே பிறந்தன என்பதையும், இந்து சமயம் அவற்றிலிருந்து வேறுபட்டுத் தனி மனித உயர்வுக்காக அமைந்துள்ளதை என்பதையும் கூறாமல் கூறி, தனிமனித மேன்மைக்காக, குறிப்பாக மனித இனத்தின் எதிர்காலத்தை நிர்ணயித்திடும் இளைஞர் சமுதாயத்தினரின் நலனுக்காக அவர் காட்டிய ஈடுபாடானது அவர் கண்ட எதிர்கால இந்தியக் கனவினை நமக்கு இனம் காட்டியது.

நேர்மையான உழைப்பு, பயன் கருதாத கடமை உணர்வு, சோம்பலில்லாத வாழ்க்கை நிலை, கள்ளமில்லாத அன்பு, தியாக உணர்வுடன் கூடிய நாட்டுப்பற்று, வேற்றுமை பாராட்

டாத சகோதர உணர்வு இவையே இன்றையே இந்திய இளைஞர் சமுதாயம் தங்கள் வாழ்வில் பெற வேண்டும் என்பதை தன் வாழ்நாளில் சிந்தனையாலும், சொல்லாலும், செயலாலும் உணர்த்திக் கீதைக்கு ஒரு விளக்கமாகத் திகழ்ந்தார் சுவாமி விவேகானந்தர். உள்ளத்தூய்மையே குணம் சிறக்கவும் , அக்குணச் சிறப்பே குடும்பத்தில் அமைதியினையும், அவ் அமைதியே நாட்டில் ஒழுங்கினையும், அவ்வொழுங்கே உலக அமைதிக்கும் வழி காட்டும் எனும் கருத்தில் தளரா உறுதியும், சட்டமோ வன்முறையோ பிரச்சனைகளுக்குத் தீர்வாக அமையாது என்பதில் மாறா நம்பிக்கையும் கொண்ட விவேகானந்தர், ஆன்மீக உயர்வே, தர்மநெறியே இறுதிவரை இன்பத்தையும், அமைதியினையும், அன்பினையும் அமைத்துத்தரும் என்பதை உணர்த்திக்காட்டினார். தனி மனித விஞ்ஞான வளர்ச்சியில் மற்றும் நவீன சமுதாய வளர்ச்சியில் மாற்றங்கள் பல நாளும் கண்டாலும், அவையாவும் நிரந்தரமான அமைதியினை, பிரச்சனையற்ற உலகத்தைத் தோற்றுவிக்க முடியாது என்று அவர் எண்ணியே, ஆன்மீக மறுமலர்ச்சியே - சமய ஈடுபாடே - வேதாந்த விழிப்பு ணர்வே வாழ்க்கையின் அடிப்படை அறவுணர்வைத் தட்டியெழுப்பக்கூடியது என்பதை அறிவுறுத்தி, அதன்படி வாழ்ந்தும் காட்டிய ஆன்மீக வள்ளலாவார் சுவாமி விவேகானந்தர். ஆரோக்யமான உடல், தெளிந்த அறிவு, கட்டுப்பாடான மனம், கூர்த்த நுண்ணறிவு, இரும் பொத்த உள்ளத்துணிவு, இரக்கமுள்ள இதயம், பொதுநல வாழ்க்கைநெறி, இறைவனைக் காணத்துடிக்கும் உணர்வோட்டம் ஆகியவற்றையே இன்றைய இளைஞர்களிடையே அவர் காணத்துடித்தார்.

மக்களை நாடிச்சென்று, அவர்கள்தம்' பிரச்சனைகளைக் கண்டறிந்து, அவற்றிற்குத் தீர்வு தனி மனித வாழ்க்கை நெறியே என்பதை அறிவுறுத்தி, அதற்குச் சமயமே இறுதிப் புகலிடம் என்பதை விளக்கி, சடங்குகளற்ற சமயத்தை சாமான்யர்க்கு அறிமுகப்படுத்தியதன் மூலம் ஒரு புதுமையை - ஒரு புரட்சியை ஏற்படுத்தி, தேசியம் கலந்த ஆன்மீகவாதியாக விளங்கினார் விவேகானந்தர். தனி மனிதனிடம் நம்பிக்கையும் மதிப்பையும் வைத்திருந்த அவர் 'விழித்திரு - எழுந்திரு' என்பதனை ஒரு தாரக மந்திரமாக அவர்களிடையே உணர்த்தி, சமுதாயத்தின் கீழ்மட்டத்தினரின் வாழ்க்கை நிலையே, மேல் மட்டத்தினரின் அமைதியினை நிர்ணயிக்கும் அளவுகோல் என்பதை அறிவுறுத்தி அதற்கு, தியாகம் பரந்தமனப்பான்மை, பற்றற்ற வாழ்க்கை, பொதுத்தொண்டு ஆகியனவே உறுதுணையாகும் என்பதைக் கூறி, அதற்குத் தானே ஒரு முன்னுதாரணமாக விளங்கி மின்னி மறைந்தார்.

தத்துவம் பேசி மக்களைக் குழப்பாது, வேதாந்தம் பேசி காலத்தைக் கழிக்காது, சமயத்தைக்காட்டி சந்தர்ப்பத்தை நழுவவிடாது, மொழி இனம் பேசி மோசம் செய்யாது, கூறப்போனால் இன்றைய இந்நாட்டு அரசியல், சமூக, பொருளாதார, சமய நெறிகளுக்கு அப்பாற்பட்டவராய், ஒருவன் மற்றவர்களுக்கு அறிவுரை கூறுவதைவிட, தனக்குத்தானே நேர்மையுடன் கேள்விகள் கேட்டுக்கொண்டால், அங்குக்கிடைத்திடும் பதில்களே அவனைத் திருத்திடவும், அவன் திருந்தும்முகந்தான் சமுதாயமும், நாடும் உயர்ந்திடும் என்பதை உணர்த்தி நமக்கு வழிகாட்டியவர் இந்தியாவின் இறைத்தூதர் சுவாமி விவேகானந்தர்.

ஆண்டுகள் பல வாழ்வோம் என்று எண்ணுவதைவிட, வாழும் வாழ்க்கையினை எவ்வாறு மானுடம் மாண்புறும் வகையில் பயனுள்ளதாக அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதைத் தன் வாழ்க்கை நெறியின் மூலம் வகுத்துக்காட்டிய சுவாமி விவேகானந்தரின் அடிச்சுவட்டில் நாம், நாட்டுப்பற்றும் கலாசார ஈடுபாடும், கடமை உணர்வும் கொண்டொழுகி, மற்றுமொரு புத்தாண்டு பிறந்திட்ட இத்தருணத்தில் நம்பிக்கையுடன் நம் வாழ்க்கையில் பொருளுள்ள ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்குவோமாக!



# இது என்ன குணம்?

திரு. ஆர். கண்ணன் - திருக்குடந்தை.

பகவானின் கல்யாண குணங்கள் எண்ணிலடங்கா. ஸௌசீல்ய, வாத்ஸல்ய, மார்த்தவ, ஆர்ஜவ, ஸௌஹார்த குணங்கள் பலப் பல. ஆனால் சில குணங்களுக்குப் பெயரிட முடியாது. அதை எந்த வகுப்பிலும் அடக்கமுடியாது. அப்படி ஒரு குணத்தை ஆசார்ய ச்ரேஷ்டரான கூரத்தாழ்வான் குறிப்பிட்டு, தன் வியப்பை வெளியிடுகிறார்.

"யத் தாத்ருசாகஸம் அரிம்
ரகுவீர வீக்ஷ்ய
விச்ரம்யதாம் இதி முமோசித
முக்தம் ஆஜௌ ।
கோஅயம் குண:?
கதர கோடிகத! கியாந் வா?
கஸ்ய ஸ்துதே: பதம்?
ஆஹோ: பத: கஸ்ய பூமி: ।।
(அதிமாநுஷ ஸ்தவம் - 27)

சக்ரவர்த்தித்திருமகன் யுத்தத்தில் செய்வதறியாது மயங்கின எதிரியான ராவணனைப் பார்த்து "களைப்பாறி (நாளை) வருவாயாக" என்று போகவிட்டான். இந்தக் குணத்திற்கு என்ன பெயருள்ளது? எந்த வகுப்பில் அடங்கியது? எவ்வளவானது? யாருக்குத்தான் புகழ்வதற்கு வகையாகாது? யார்தான் இந்த குணத்தை அறுதியிட்டு தெரிந்து கொள்ள முடியும்" என்று வியக்கிறார் ஆழ்வான்.

போர்க்களத்தில் எதிரியான ராவணன், வில் இழந்து, முடியிழந்து தனியே நிற்கிறான். ராவணனோ எப்பேற்பட்ட எதிரி!

(1) எம்பெருமானோடு எதிர் அம்பு கோத்தவன். "வணங்கலில் அரக்கன்", "திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசை அரக்கன்". பிராட்டியையும் பெருமாளையும் பிரித்த கொடிய ஸ்வபாவமே உருவெடுத்தவன். "யதிவா ராவண ஸ்வயம்" என்று ராவணனே சரண் அடைந்தால் க்ஷமித்து ஏற்றுக்கொள்ளக் காத்திருக்கும் எம்பெருமானையே போரில் எதிர்கொண்டவன். "மாயா சீதையின் தலையைக் கொய்து சக்ரவர்த்தித் திருமகனையே மயங்கச் செய்த மாயாவியான எதிரி. "ந நமேயம்" என்று அஹங்காரம் கொண்ட வணங்காமன்னனாகிய எதிரி. பகவானுக்கு நேர் எதிரி.

(2) புருஷகாரம் செய்யக்காத்திருக்கும் பிராட்டியின் உபதேசத்தையும் உதறித்தள்ளி, அரக்கிகளால் பிராட்டிக்குத் துன்பம் கொடுத்தவன். கொடுஞ்சொற்களால் பெருமானையும், இளைய பெருமானையும் பிராட்டியின் முன்தூற்றியன் ராவணன். பிராட்டி, இருமாசத்திற்குள் தன் வசப்படாவிட்டால் அவளைக் கொன்று தின்று விடுவதாகப் பிதற்றியவன். கருணையான உருவான பிராட்டியையே வருத்தியவன்.

(3) இதெல்லலாம் ஒருபுறம் இருக்க, தன் அடியார்கள், தன்னைச் சேர்ந்தவர்களாகிய ஹநுமான் முதலிய வானரர்கள் மீது பாணங்களைப் பிரயோகித்து அவர்களையும் துன்புறுத்தியவன். தன்



மோதிரததை பிராட்டிக்கும, பிராட-டியின சூடாமணியைத தனனிட-மும சேரதது இருவருக்கும பெரும-கிழச்சியைத தநத ஹனுமானின வாலில நெருபபு வைதது மகிழந-தவன இநத ராவணன

ஆகவே, தனககும, தன பிராட்டிக்கும தன ஆதமா வான அடியாரகளுககும துன பம செயது மகிழநத ராவ ணன எதிரிலே நிறகிறுன வில இழநது, முடியிழநது, தனியே நிறகிறுன. ஒரே பாணம, ஆம ஒரே பாணம போதும - அவ வரககனை வீழதத - ஆனால கருணு காகுததஸனோ "இனறு போய போருககு நாளா வா" எனறு அனுபபுகிறுன

ஆழவான, இநத குணத்தைத தான "இது எததகைய குணம? இதறகு எனன பெயர? இந தக குணததின சிறபபை எனன வெனபது? எபபடிப புகழவது?" எனறு வியககிறுர கருணைக கும ஒரு எலலையுணடு இபபடி மஹாபாபியான ராவணனைக கொலலாமல விடடு அவனைப போரமுனையிலிருநது விடுவித தது சககரவரததித திருமகனின குணஙகளில எலலாம சிறந ததாயிறறு எனறு ஆழவான குறிபபிடுவது சாலபபொருந துமனறே!

ஆழவானின திருக குமாரராகிய ஸ்ரீபராசரபட்டரும ஸ்ரீரஙக நாசசியாரை துதிககத தொடஙகி, நாசசியாரின உதார குணததில ஈடுபடடு "கோஅயம உதாரபாவ" எனறு ஆசசரி யபபடுகிறுர.

"ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம பதம வா கஸ்மைசி தஞ்ஜலிபரம்
வஹதே விதீரய ।
அஸ்மை ந கிஞ்சிதுசிதம
க்ருதமிதயதாம்ப!
தவம லஜஜஸே கதய
கோயமுதாரபாவ? ॥
(ஸ்ரீகுணரதநகோசம - 58)

யாரேனும ஒருவர பிராட்டியி டம ஓர அஞ்ஜலியைச சமரப பிததால பிராட்டி ஐஸவரயம, கைவலயம மறறும மோக்ஷம வரை பலனைக கொடுதது விடடு இனனமும உசித மான பரதயுபகாரம செயய விலலையே எனறு வெடகப படுகிறுள இநத உதாரகுணம எததகையது? எனறு பட்டர ஆசசரயபபடுகிறுர

செயவதோ எளியதோர அஞ ஜலி மாததிரம, பெறுவதோ பெருமபயனகள

இநத உலகததில (1) ஐஸவரயம முதலியவைகளைக கொடுதது அநுகரஹிககிறுர இநத அநிதயமான ஐஸவர யததைக காட்டிலும மேமபடட தான கைவலயமாகிற, (2) ஆத மாநுபாவததையும அருளுகிறுள ஆதமாநுபாவததைக காட்டி லும மிககச்சிறநததான பக வதநுபவமான (3) மோக்ஷாநந தததையும கொடுதது விடுகி றுள பிராட்டி அஞ்சலி செயத தறகு இவவளவு பரதயுபகாரமா? அநுகரஹமா!

நம அஞ்ஜலியை பிராட்டி ஒரு பெரிய மலையை சுமப பதுபோல (வஹிபபது போல) உணரநது, நமககு மோக்ஷாநந தம வரை எலலாவறறையும அநுகரஹிககிறுள. இதுபோ தாதெனறு, இனனும கொடுக்க விலலையே எனறு வெடகபபடு கிறுள பிராட்டி எனறு பட்டர ஸாதிககிறுர.

மோக்ஷாநநதததைக காட்டி லும, சிறநத ஆநநதம வேறெனறுமிலலை. அதையும் கொடுதது, அதறகுமேல ஒனறு இருநதால அதையும கொடுப பதற்கு பிராட்டி ஸித்த மாக இருககிறுள எனறுல

இநத உதார குணததை என னவெனறு சொலவது எனறு பட்டர வியககிறுர இதை விவ ரிககவொணணுது எனறு ஆச சரயபபடுகிறுர.

திருததககபபனாரான ஆழ வான பெருமாள திருககலயாண குணததைக கணடு பெருமைப பட்டால திருககுமாரரான பட டர பிராட்டியின உதாரகுணத் தைக கணடு அநுபவிதது மகிழகிறுர

ஸ்ரீமதே நிகமாநத மஹா தேசி காயநம





திரு எடகநாதஸ்வாமி கோயில, திருவேடகம.

(தொடர கட்டுரை)

# பகவத் கீதை

அத்தியாயம் 7

# ஞானவிக்ஞான யோகம்

உமைப்ரியன்

பகவான் கூறுவது :

*யோக யோயாம யாம் தனும பகத்*
*சரத்தயார்சிதுமிச்சதி ||*
*தஸ்ய தஸயாசலாம சரததாம*
*தாமேவ விததாம்யஹம || (21)*

"எநதெநத பகதன எநதெநத இறை வடிவத்தை தீவிர மாக வழிபட ஆசைபபடுகி ருனோ, அவரவர்களுடைய அந தத தீவிரததனமையை உறுதி யுடன நான அமையச செய வேன"

[இசசெயயுளில பகதியின முக யத்துவம வலியுறுததபபடுகி றது. லட்டு, மைசூர பாகு, ஜிலேபி எனறு பல வகை இனிபபு வகைகள இருக கலாம. ஆனால, அவறறின பொதுததனமை இனிபபும மட டுமே. ஆம கடவுளின உருவங கள, பெயரகள பலவகைப படலாம. ஆனால அவற றைத் தொழுதிடும போது பகதி எனறு உணரவே பொது வாக அமைகினறது. அநதப பகதி முதிரநத போது வேறு பட்ட உருவஙகளும, பெயரக ளும மறைநது போகும ஒரு வனே தேவன எனும உணமை அறிவு புலபபடும. இதைததான கண்ணனும பகதர்களிடம எதிர பார்க்கினருன.]

*ஸ தயா சரததயா யுக்தஸ்-*
*தஸ்யாராதன மீஹதே |*
*லபதே ச தத: காமானமயைவ*
*விஹிதானஹி தான் || (22)*

"தீவிரததனமையுடைய அவன (யாரொருவன) அககடவுளை வழிபடடு, அதனால அவன விருமபியவறறைக கிடைக்கப பெறுகினருன ஆனாலும, அவவிருமபும பொருடகளை உணமையில தகுநதவாறு (அவ னுககுக) கொடுபபது நான தான"

[ஊரில குளம, குட்டை, ஆறு, அருவி போனற நீரநிலைகள் பல இருககலாம். ஆனாலும அவைகொணடுளள நீர எனபது மேலிருநது பொழியும் மழை யேயாகும அதே போன றது தான மறறைய தேவதை யாகிய கடவுளரகள வழஙகும அருளானது மூலபபொருளா கிய அநத மகாவிஷ்ணுவின கரு ணையினால்தான எனபது இச செயயுளில வலியுறுததபபடுகி றது]

*அநதவதது பலம தேஷாம்*
*ததபவதயல்பமேதஸாம |*
*தேவான தேவயஜோ யாநதி*
*மதபகதா யாநதி மாமபி || (23)*



"ஆனால, சிறுஅறிவு படைத்த இவர்கள் (மற்றைய கடவுளர் களை வழிபடுபவர்கள் (அச்சிறு) அக்கடவுளர்களையே அடைகின்றனர். என்னை வணங்கும் என் பக்தர்கள் என் னையே அடைகின்றனர்."

[ஆழமான ஆற்றில் மூழ்குப வர்களுக்குப் பலவித நிறமுள்ள, உருவமுள்ள கூழாங்கற்கள் கிடைக்கும். அதே நேரத்தில் ஆழமான கடலில் இறங்குப வர்களுக்கு நல்ல முத்துக் கள் கிடைக்கும். ஆகவே மூழ் கும் செயல் என்பது இருவரும் மேற்கொள்ளும் ஒரே முயற் சிதான். ஆனால் கிடைக் கும் பலனோ வேறுபட்டது ஆகவே சிறு கடவுளர் களை வணங்குபவர்கள் தங்கள் சிறு சிறு இவ்வுலக ஆசை களை நிறைவேற்றிக் கொள் ளலாம். ஆனால் பரம்பொ ருளான கண்ணனை வணங்கு வோர் நிலைத்த பேரின்பத்தை அடையலாம்]

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம்
மன்யந்தே மாமபுத்தய: ।
பரம் பாவமஜானந்தோ
மமாவ்யய மனுத்தமம்: ।। (24)

"என்னுடைய அழியாத, ஒப் புமை கூறமுடியாத பரம்பொ ருள் உண்மையை அறியாத மூடர்கள், (ஐந்து) புலன்களுக்கும் கட்டுப்படாத என்னை அந்தப் புலன்கள் அறியும் குணத்தை உடையவனாகக் கருதுகின்ற னர்."

[இச்செய்யுளில் விஷ்ணுவின் இயல்பு கூறப்படுகிறது. இந்த உலக உயிர்கள் வினையின் காரணமாக ஓர் உருவத்தைக் கொண்டு பிறக்கின்றன. அது போலத்தான் மனிதனும் பிறக் கின்றான். ஆனால் அவ்வு யிர்களைக் காப்பாற்றும் இறை வன், கண்களுக்குத் தெரியும்

மனித உருவம் கொண்டாலும், அவன் அதற்குள் கட்டுப்படா தவன். மனிதனை உயர்த்துவ தற்கே இறைவன் தான் ஆடும் நாடகத்தில் ஒரு காட்சியாக இப்பூமியில் உருவம் எடுக்கின் றான். இதனை அறியாதவர்கள் அறிவில்லாதவர்களேயாவர்.]

நாஹம் ப்ரகாச ஸர்வஸ்ய
யோகமாயா ஸமாவ்ருத: ।
மூடோ அயம நாபிஜானாதி
லோகோ மாமஜமவ்யயம் ।। (25)

"யோக மாயையினால் நன்கு நான் மூடப்பட்டுள்ளேன். (அத னால்) நான் எவருடைய அறி வுக்கும் அறியப்படுவதில்லை. பிறப்பே இல்லாத அழிவே இல் லாத, என்னை இந்த அறி வற்ற உலகம் தெரிந்து கொள் வதில்லை"

[இந்த இயற்கையானது முக் குணங்களின் சேர்க்கையாகும். அத்தகு இயற்கை, குணங்க டந்த இறைவனின் யோக மாயையாகும். வானத்தில் மேகம் இருக்கிறது. இருக் கின்றது என்பதை சூரிய ஒளி யால்தான் அறிய முடிகிறது. அந்த சூரியனையே அந்த மேகம் மறைகின்றது. இந்த மறைப்பையும் அந்த சூரிய ஒளியினால்தான் காணமுடியும். ஆகவே சூரியனை மேகம் மறைப்பதுபோன்று தோன் றுவது மாயையே. அதே போன்று இயற்கையா கிய மாயையினால் இறைவன் மறைந்துள்ளான். இது யோக மாயை. இதனை அறிந்து கொள்ளாதவர்கள் இறைவனை ஒரு சாதாரண மண்ணுலகப் பிற வியாகக் கருதும் அறிவற்றவர் கள். உண்மையை உணர்ந்தவர் கள் இறைவனின் திருவிளை யாடலை நன்கு அறிவர்.]

வேதாஹம் ஸமதீதானி
வர்த்தமானானி சாஅர்ஜுன ।।
பவிஷ்யாணி ச பூதானி மாம் து
வேத ந கஸ்சன ।। (26)

"அர்ச்சுனா, (முன்பு) சென்றுள் ளனவற்றையும், (இன்று) இருப் பவனவற்றையும், (நாளை) வரு பவன்றறையும் ஆகிய உயிர் கள் பற்றி எனக்குத் தெரியும். ஆனால் யாருக்கும் என்னைத் தெரியாது."

[இந்த உலக உயிர்களின் தோற்றமும் மறைவும் மாயை யின் ஆற்றல்தான். இந்த ஆற் றலின் தலைவன் அந்த மாமா யன்தான். காலச்சக்கரம் அவன் அருளால்தான் சுழல்கிறது. அதனால்தான் யுகங்கள் மாறு கின்றன. ஆனால் அந்த யுகங் களில் நடந்தது, நடந்துவரும், இனி நடக்க இருக்கும் யாவுமே அவனறிவான் ஆனால் மனி தன் தன் வாழ்நாளிலே தன் னையே அறிந்து கொள்ள முடி யாதவன். தன்னை அறிய மனிதன் அவ்இறைவனையே அவனருளுக்காக நாடவேண்டும். உண்மையான, நேர்மையான பக்தியே இறை உண்மையை அறிய வழிவகுக்கும். உண் மையான பக்தர்கள் காந் தக்கல்போன்றவர்கள். அவர் களால்தான் இறைவன் எனும் இரும்பினை இழுத்திட முடி யும். பக்தி இல்லாதவர்கள் மரம் போன்றவர்கள். மரம் காந்த சக் தியினைப் பெற முடியாது.]

இச்சாத் வேஷஸமுத்தேனே த்வந்த்வ
மோஹேன பாரத ।
ஸர்வபூதானி ஸம்மோஹம்
ஸர்கே யாந்தி பரந்தப ।। (27)

"எதிரிகளை வருத்தமூட்டும் பாரதா, விருப்பு வெறுப்பு எனும்

குணஙகளால தோனறும இரு நிலை ஆசைகளினால பிறவி எடுககும போதே எலலா உயிர் களும குழபபததால சூழப்படு கினறன.''

[இசசெயயுளில 'தவநதவ மோகம்' எனும சொல வருகி றது. அதாவது இருநிலை ஆசை அலலது மோகம என பதாகும். இருநிலை என்பது நனமை தீமை இயல்புகளாகும. அதாவது நனமையால வரும் இனப உணரவுகளுககும, தீமை யால கிடைககும துனப உணர் வுகளுககும இடையே சிககி அவ் வுணரவுகளைததரும உணர்சசிக ளுககு ஆளாகினறுன. இன னும விளககமாகக் கூறின், மனிதன் நன்மையை எதிர பாரதது கிடைததிடும இனபத திறகும், துனபததைத் தவிரப பதால் கிடைததிடும் இனபத திற்கும இடையே அகபபட்டு, குழம்பி மனஅமைதியை இழக் கினறுன். இந்த இரு உணர்வுக ளைப பறறிக் கவலைபபடாமல இரணடையும எதிரபாரக்காது விருபபு- வெறுபபு அற்று விளங கிடும போது, அவன இறைவ னைப பறறி அறிய முடிகிறது.]

யேஷாம த்வந்தகதம் பாபம

ஜனானாம் புண்யகர்மணும் ।

தே தவந்த்வமோஹநிரமுக்தா

பஜநதே மாம தருடவ்ரதா: ।। (28)

"ஆனால நலவினைகளை உடைய எநத மக்களிடமிருந்து பாவமானது விலக்ககபபடுகி றதோ, (அபபோது அவரகள்) இருநிலை ஆசைகளிலிருந்து விடுதலைப்பெறறு, (அவர்கள) உறுதியான விரதமனப்பான்மை யுளளவர்களாக விளஙகி என்னை வணஙகுகிறுரகள."

[மனிதன் தொடரந்து செயல் வினை ஆற்றிக் கொண் டிருககினறுன. அது போது அவவினைகள யாவும் அவன சொநத நலனகளுக்கா கவே அமைகின்றன. இநத நிலையில அவன மனதில் இறையுணரவு எனபது என றும் தோனறுது. சுயநலப் பறறு பரமனின அருளைபபெற றுத தராது. அபபரமன பறறே இறுதியான இனபததைத தர வலலது. ஆம துனபததிலும தோல்வியிலும், இனபததிலும, வெற்றியிலும மனம ஊசலா டாது, பயன கருதாது, சுய நலநோககம இல்லாது வினை புரியும் பண்பே அவனுககுப் புண்ணிய பலனை அளிககிறது. அநத நிலையே அவனுக்கு ஓர உறுதியான குழபபமில லாத மனபபககுவததை உண டாக்குகிறது. அதுவே இறை உணமையை அறிய வழிவகுக குமர.]

ஜராமரணமோக்ஷாய மாமாசரிதய

யதந்தி யே ।

தே ப்ரஹ்ம தத்விது: கருதஸ்ன

மதயாத்மமம கரம சாகிலம ।। (29)

"கிழத்தனமையினினறும, இறப பிலிருந்தும விடுதலை அடைய என்னை வணஙகி தகுநத முயறசிகளை மேறகொளபவர் கள அந்த பரமபொருளையும ஆத்ம சொரூபததையும, வினை கள் எலலாவறறையும அறிநது கொளகினறனர''

['மனிதன அழுதுகொணடே பிறக்கினறுன, ஏமாறறஙகளு டன சாகினறுன' எனறு சொல லுவர். அழுதுகொணடே பிறந் தாலும ஆசைகளுடனதான பிறக்கின்றுன. பினனர் நடு வில அழுவது நினறுலும் ஆசைகள் வலுவடைகினறன. உடலில வலுவிருக்கும் வரை ஆசைகளுக்குக் குறைவிலலை. உடலும் உளளமும் சோரவடை யும முதுமைக் காலத்தில் தான மனிதன் எது உண் மையான ஆசை எனபதைப் பற்றி எணணத தலைப்படு கினறுன. அதுபோது மர ணம நெருஙகுகினறது. அத னைத தவிரக்க முடியாது என் பதை உணருகினறுன். மரணத் திறகு முன தனனைத திருத திககொளள ஆசைப்படுகின றுன். அநத இறுதி ஆசை தான இறைவன் மீது நாடடம் கொளளசசெயகிறது. ஆகவே மனிதன இளமையாக இருக் கும்போது, மனித வாழவின் உண்மையை அறிதல அவசி யம. அபபோதுதான அவ னுள இறைநாடடம தோனறி டும. அநத நிலையே அவனை உயரததிடும். அதனால அவன இறைவனையும், தன்னையும், தான செயயும வினைகளின் முககியததுவததையும அறி யத்தலைப்படுகின்றுன். அது போது, அவன தன வயோதி கத் தனமையையோ, மரணத் தையோ கணடு பயப்படமாட் டான. அவனுடைய மரணம் ஏமாற்றமாக இருக்காது.]

ஸாதிபூதாதிதைவம மாம் ஸாதி

யக்ஞம் சயே விது: ।

பரயாணகாலே அபி சமாம் தே

விதுர்யுக்த சேதஸ: ।। (30)

"யாரொருவன் என்னை, ஆதி பூததததுடனும், அதிதெய்வததது டனும அதி யக்ஞத்துட னும விளஙகி அறிநதுகொள்கி றுரகளோ, (அவர்கள்) நிலைத்த மனததைக் கொண்டவர்களாக, சாகும நிலையிலும என்னை அறிந்துகொளகிறுர்கள்."

[மனிதன தான் இறக்கநேரி டும அநத நேரததில் தன் வாழ்க் கையைப பறறி ஒரு கண்

## கீதையின் சாரம்

ஏன வீணாகக கவலைபபடுகிறாய? யாரிடம வீணாகப பயப் படுகிறாய? யார உனனைக கொலல முடியும? ஆனமா பிறபபதும் இல்லை; இறபபதும இலலை.

எது நடநததோ, அது நனறாகவே நடநதது. எது நடககி றதோ, அது நன்றாகவே நடககிறது. எது நடகக இருககிறதோ, அதுவும் நன்றாகவே நடககும. நீ இறநத காலததைப் பறறி வருததப்படாதே. எதிரகாலததைப பறறி கவலைபபடாதே. நிகழ காலம் நடநது கொணடிருககிறது.

உனனுடையது எதை இழநதாய? எதற்காக நீ அழுகிறாய? எதை நீ கொணடு வநதாய, அதை இழபபதறகு? எதை நீ படைததிருநதாய, அது வீணாவதறகு? நீ எதையும கொணடு வரவில்லை. எதை நீ எடுததுககொணடாயோ அது இஙகி ருந்தே எடுககபபட்டது எதைககொடுததாயோ, அது இஙகேயே கொடுக்கபபட்டது. எதை எடுததுககொணடாயோ அதை பக வானிடத்திலிருநது எடுத்துககொணடாய எதை எடுததாயோ அதையே கொடுததாய. வெறும கையோடு வந்தாய! வெறும கையோடு செலவாய. எது இனறு உனனுடையதோ அது நேற்று ஒருவருடையதாக இருநதது. நாளை மற்றொருவருடை யதாகிறது. நீ இதை உனனுடையதாக நினைக்கிறாய. இநத மகிழசசிதான உனனுடைய துககஙகளுக்குக காரணமாகும.

மாறறம் உலக நியதியாகும் எதை நீ மரணம எனறு நினைக்கிறாயோ, அதுவே வாழககையாகும ஒரு வினாடியில நீ கோடீஸ்வரனாக ஆகி விடுகிறாய மறு வினாடியே ஏழையாகி விடுகிறாய். எனனுடையது - உனனுடையது, சிறியது-பெரியது, தனனுடையது-பிறருடையது எனபதை மனதிலிருநது விலக்கு; எண்ணத்திலிருநது விலக்கு. பிறகு எலலாம் உனனுடையது; எலலாவறறிறகும நீயே ஆவாய.

இவவுடல உனனுடையது அன்று. நீ உடலுககாக அன்று. உடல் நெருப்பு, நீர், காறறு, பூமி, ஆகாயம ஆகியவறறால ஆகியது. மேலும இவைகள உடலிலேயே சேர்ந்து விடும. ஆனால ஆனமா நிலையானது. பிறகு நீ யார்? நீ உன னைப் பகவானுக்கு அரபபணம செய்து விடு. இதுதான எல்லாவற்றைக் காட்டிலும் சிறநத துணை ஆகும். எவன் இததுணையை அறிகிறானோ அவன பயம, கவலை, சோகம ஆகியவறறிலிருந்து எபபோதும விடுபடுகிறான்.

நீ எதைச் செய்கிறாயோ, அதைப பகவானுக்கு அர்பபணம் செய்து விட்டுச் செய். இதனால் நீ பாசபபிணைப்பிலிருந்து விடுபட்டு மகிழ்ச்சி அடைவாய்.

**ஆகவே நீ உன் கடமையைச் செய், பலனை எதிர்ப் பார்க்காதே.**

அனுப்பியவர் : **தி.வி. .பார்த்தசாரதி - காஞ்சிபுரம்.**

ஞேட்டத்தைத் விரைவாக காணு கினறான. பறறுகளின் கார ணமாக அவனுககு அவனது மரணம அசசததையும், குழப் பததையும ஏறபடுததுகினறது. ஆனால வாழககையை, அவன அதனை சுவைக்க விரும்பும நிலையிருநதே, எது வாழ்ககை, எனறு ஆலோசிததானாயின அவன் இயற்கையை (அதன ஆற்றலை) அதன கண நிக ழும நிகழ்சசிகளை முறையாக, நிதானமாக அறியத்தலைபபடு கினறான. .நிரநதரமற்ற தன வாழ்வில் எது உணமை, எது நிலையானது என்பதை அறி கின்றான். அறிந்த அநத நிலை யில அவன் ஒரு மாமனிதனாக விளங்குகின்றான். அதுபோது அவனுள் பக்தியும, பேரறிவும் வளருகின்றது. இறை இன பம் சுவைகக முறபடுகினறான. ஆம, மரணம . புகட்டும் இப்பா டத்தினை, மரணப்படுக்கையில் அறிய இடம கொடுககாது, இள மையிலேயே அறிதல் அவசியம் எனபது இச்செயயுளால் சுட் டிக்காட்டபபடுகிறது.]

இதி ஸ்ரீமத் பகவத கீதாஸூப-
நிஷத்ஸு பரஹ்மவித்யாயாம்
யோக சாஸ்த்ரே
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஞானவிக்ஞானயோகோ நாம
ஸப்தமோ அத்யாய: ||

["இறை உண்மையைக் கூறு வதும, யோக இயலானதும், ஸ்ரீகிருஷ்ணனக்கும அரச்சு னனுக்கும் இடையே நடை பெறும உரையாடலுமாகவும் உள்ள இந்த பகவத கீதை என்னும் உபநிடதத்தில் உள ளது ஞானவிக்ஞான யோகம் என்னும்.(இந்த) ஏழாம் அத்தி யாயமாகும்."]

(தொடரும்)



# மகர நெடுங்குழைக்காதர்

திரு. செ. பன்னீர்செல்வம் - சென்னை.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா" என்றனர முன்னோர். எல்லா ஊர்களிலும் கோயில்கள் இருக்கின்றன. இறைவன எங்கும் நீக்க மற நிறைந்துள்ளான். எனினும் ஒரு சில தலஙகள மிகவும் சிறப்புடையனவாகப போற்றப் பெறுகின்றன. வைணவத்தில் 108 திருப்பதிகள் மிகவும் சிறபபாகப் போற்றப்பட்டு வருவது நாம் அறிந்த ஒன்றே.

பாண்டிய நாட்டு வைணவத் தலங்களுள் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்வது 'திருபபேரை' என்னும் திருபபதியாகும. இது பொருநையாறறின் தெனகரையில் அமைநதுளள தலம. ஆழ்வார்களின ஏகப்பிரதிநிதியாக விளங்கி வேதம் தமிழ் செய்த மாறன் நம்மாழவாரால மங்களாசாசனம் பெற்ற தலம். திருவாய்மொழி ஏழாம் பத்து "வெள்ளைச் சுரிசஙகு" எனத் தொடங்கும் மூன்றுந் திருவாயமொழிப் பாசுரங்கள் இத்திவ்ய தேசத்தைப் பறறியதாகும்.

இப்பதிகம தாயமாரும் தோழிமாரும் தடுக்கவும், தலைவி திருப்பேரைக்குச செல்வேனெனறு துணிந்து கூறும் அகப்பொருள்துறைப் பாசுரஙகளைக் கொணடது.

திருமங்கையாழ்வாரும் தம "பெரிய திருமொழி - மூனறுந திருமொழி"யின் இரண்டாம் பாசுரததில் "மகர குழைக்காதனை" என்று கூறுகிறார்.

திவ்யகவிப் பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும் தம் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில

அரைசாகி வையமு முதாண்டாலு மின்பக்
கரை சார மாட்டார்கள் கண்டீர்- முரைசாரும்
தென்திருப்பே ரைபபதியான் சீர்கேட்டு நாவிலவன்
றன்திருப்பே ரைபபதியா தார்.

எனறு அருளிச் செயதுளளார்.

இவற்றால தென்திருபபேரைப் பெருமானது திருநாமததைக் கேட்டாலும், உசசரிததாலும பேரின்ப வீடு கிடைக்குமென்பது பெற்றாம். இததலத்திறகு ஹரிபதக்ஷேத்திரம் என்றும பெயர்.

இததலம நவ திருபபதிகளுள ஒன்றாகக் கருதப்படுகின்றது. நவதிருபபதிகளை நவக்கிரக க்ஷேத்திரங்கள் என ஆன்றோர் கூறுவர். ஜோதிடர்கள் அதனைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுவர்.

1. சூரியன - வரகுணமஙகை
2. சந்திரன் - திருப்புளிங்குடி
3. செவ்வாய் - திருக்குளந்தை
4. புதன் - திருக்குறுகூர்
5. வியாழன் - திருக்கோளூர்
6. சுக்கிரன் - வைகுந்தம்
7. சனி - தென்திருப்பேரை
8. இராகு - அரவிந்தலோசனன்
9. கேது - தேவபிரான்

(8ம், 9ம் இரட்டைத் திருப்பதிகள்)

மிக்கச் சிறப்புடைய இத்தலத்தில் கோயில் கொண்டிலங்கும் பெருமாளது திருநாமம் மகர நெடுங்குழைக்காதர். (நிகரில் முகில் வண்ணன் என்ற பெயரும் உண்டு, எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலம். தாயார் குழைக்காது வல்லி நாச்சி - விமானம பத்திர விமானம். தீரததம் சுக்கிர புஷகரணி. மகர குணடலங்கள் அகபபட்டமையால 'மகர தீர்த்தம்' எனறும், வருணன முனனர் தான அசுரரிடம இழந்த பாசத்தை, இத்தல இறைவனை வணங்கித் திருமபப் பெற்றமையால், அந்நனறிக்காகத் தான் தவம்புரிநத இததீரததததின "மகிமை" கூடுவதாக என்றதனால் "கூடுபுனலதுறை" எனறும வழங்கபபெறுகினறது.

நம்மாழ்வாரும் "கூடுபுனல் திருப்பேரையிறகே எனனைக் காடடுமினகள" எனறார. இத தீர்த்தம் மேனமை வாயநத தீரததமாகும். இதில் வருணன நீராடித் தினமும மகரநெடுங்குழைக்காதரை ஆராதனை செயகின்றான எனபர். இச்செய்தியை "மகர நெடுங்குழைக்காதர் பிளளைத தமிழ்" எனனும நூலில்

"வருணன் வந்தடிபரவு
மாமிநீர் வண்ணனை"

என்றும இன்னும் பலவிடங்களில அநநூலாசிரியர குறிபபிடுகிறார். இததீர்த்தததில நீராடி தலததை வழிபடுவோர தீங கொனறும் வராமல சுகம பெறுவர்.

## திருநாமப் பெயர்க் காரணம்

ஒரு சமயம் இலக்குமிதேவிக்குத் திருமால் தன்னிடம் வைத்

திருககும அன்பைக் காட்டிலும் கருமேனியையுடைய பூமிதேவி யிடம் மிகக அனபுடன இருப பதாக மனககுறை உணடா யிற்று. துருவாச முனிவரிடம தன் குறையைத தெரிவிததாள. இறைவன பூமிதேவியிடம மிகக அனபுடன இருப்பதறகுப் பூமி தேவியின் கருமேனியழகுதான் என நினைதது அவளும தன னைப போல செமமேனியளாக வேணடும என்று முனிவரிடம் வேணடினாள.

துருவாசரும அதறகு இசைந்து பூமிதேவியின இருப பிடம அடைந்தார். கருமேனிய ழகினால இறுமாபபு அடைநதி ருநத பூமிதேவி துருவாசரை வர வேறறு உபசரிககாமல இருக கவே அவரும சினம கொணடு "நீ திருமகள உருவததை அடை வாயாக" என்று சபிததுவிட டார்.

உடனே பூமிதேவி துருவாசமு னிவரை வணஙகி சாபவிமோச னம வேணட, அவரும "தாமிர பரணி நதிககரையில் ஹரிபதம் எனற க்ஷேத்திரததின நதியில நீராடித தவம செய. உன பழைய வடிவம உணடாகும்" எனக்கூறி, அஷடாக்ஷர மநதிரத தையும உபதேசிதது விட்டு, லட்சுமி தேவியிடம நடநததைச சொலல அவளும மனஙகுளிரந தாள.

இவவாறு சாப விமோசனம வேணடி பூமிதேவி அஷ்டாக்ஷர மநதிரததை ஜபிததுக் கொணடு "ஸ்ரீபேரை" எனனும பெயரைத தரிததுககொணடு பஙகுனிமா தப பௌரணமியில "சுககிர புஷகரணி" தீரததததில நீராடும் போது மீனபோனற வடிவமு டைய இரணடு குணடலஙகள கிடைததன. கிடைதத அவ வில இவை திருமாலின காது களுக்கே உரித்தன என்று நினைத்த மாத்திரமே பகவா னும் அவள முன்தோன்றி மகர குணடலங்களைத் தரவேண்டும் என்று கேட்க, பூமிதேவி பெரு மகிழவோடு கொடுத்தாள். இறைவன அவற்றை வாங்கித் தமது காதுகளில் அணிந்து கொண்டார். வானுலகினர் வாழத்தினர. தேவதுந்துபி கள முழங்கின. பூமாரி பொழிந்தது. தேவர்கள் "பூமிதேவியால் கொடுக்கப்பட்ட மகர குணடலங்களைக் காது களில அணிந்து கொண்ட மையால இனறுமுதல் உமக்கு 'மகரநெடுங்குழைக்காதர்' என்ற திருபபெயர் விளங்கட்டும். தீர்த் தமும் மகர தீரத்தம என்றே வழஙகபபட வேணடும்" என் வேணடினர். இறைவனு[illegible] கு[illegible] சமமதித்தார்.

"ஸ்ரீபேரை" [illegible] ரைத் தரிதது பூசே டியதால [illegible]விடம [illegible]ரை (திருபபேரை) என வழங்கலா யிற்று.

விதர்ப்ப நாட்டில் ஒருமுறை பனனிரண்டு ஆண்டுகள் மழை யின்றிப் பஞ்சம் ஏறபட அந் நாட்டு அரசன தன் ஞானாசிரி யரை வணங்கி வேணட அவர் திருப்பேரையை அடைந்து மகர நெடுங்குழைக்காதரை வழி பட்டால் பஞ்சம் நீங்கும் என் றார். அவ்வாறே அரசனும் தென்திருப்பேரையை யடைந்து குழைக்காதரை வழிபட பஞ்சம் நீங்கி சுபிட்சம் நிலவியது.

இத்தகைய சீரும் சிறப்பும் பெற்ற திருப்பேரைப் பெம் மானை நாமும் நாளும் வணங்கி நலம் பல பெற்று உய்வோமாக.



## யது வம்சம்

1 சகதநசித
2. தரும நேததன
3. கிடடினன
4. குரோடடு
5 கரதன
6 உரோமபாதன
7. யது
8. விதரபபன
9. கிருதன
10 சாதவதன
11. அநதகன
12. பஜபாநன
13 குரூரன
14. தேவமிடன
15. கிருஷணன
16. குருரன
17. தேவகுரு
18. உகரசேனன்
19. கமசன

அனுபபியவர தி.வி. பார்த்தசாரதி - காஞ்சிபுரம்.

## கனிவு

சொறகளில கனிவு நமபிககையை உருவாககுகிறது சிந தனையின கனிவு அறிவை உருவாககுகிறது. கொடுபபதில உளள கனிவு அனபை உருவாககுகிறது. -லாசு.

தொகுததவர கமலா மாரியப்பன் - கோவை.

(தொடர கட்டுரை)



# முமுட்சுப்படி

## சரம சுலோகம்

திரு. மாருதிதாசன் - காஞ்சிபுரம்

1) சரம சுலோகமாவது யாது? விளக்குக.

"ஸர்வ தர்மாந் பரிதயஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷ யிஷ்யாமி மாசுச:"

என்பது சரம சுலோகம்.

இது பகவத் கீதையில் உள்ளது. அருச்சுனனின் சோக நிவர்த்திக்காகப் பகவான் அருளின சுலோகம்.

முமுட்சுவானவன் அறிந்து கொள்ள வேண்டிய இரகசியங்கள மூனறு என்று தொடக்கத்தில பிள்ளையுலகாசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

திருமந்திரம், துவயம், சரமசுலோகம் எனப்படும மூனறினுள் சரம சுலோகம் மூன்றுவது இரகசியமாக உள்ளது.

2) இச்சுலோகத்தின் பொருள் யாது?

"சேதனன செய்யவேணடிய கட்டளைகள் சிலவற்றை வேதங்கள் முதலியன விளக்கமாகக் கூறுகின்றன. அவற்றில் கூறப்படும் எல்லாத் தருமங்களையும் விட்டுவிட்டு என்னையே பற்றுவாயாக! நான் எல்லாத் தடைகளையும் போக்கி உனக்கு நான் நன்மையையே உண்டு பண்ணுவேன். எனவே, நீ கலங்க வேண்டுவதில்லை" என்பது இச் சரம சுலோகத்தின் தெளிந்த பொருளாகும்.

3) சரம சுலோகம் எனப்பெயர் வந்ததேன்?

சரமமான உபாயத்தைப் பிரதிபலிக்கும் சுலோகம் ஆதலின், சரம சுலோகம் எனப்பெயர் வந்தது.

சரணுகதி தத்துவத்தின் சிறப்பை இந்தச் சுலோகம் அருமையாக விளக்குகிறது.

4) இந்தச் சரமோபாயம் அருளிச் செய்யப்பட்டதன் காரணம் யாது?

முக்திக்குரிய சாதனங்களாகக் கர்மயோகம், ஞானயோகம் முதலானவற்றைக் கண்ணபிரான் அர்ச்சுனனுக்கு விரிவாக உபதேசித்தருளினார். அதைக்கேட்ட அர்ச்சுனன், "அவை எளிய சாதனங்களாகா" என்றும், "பின்பற்றுதற்குக் கடினமான நெறிகள் அவை" என்றும் தன் அச்சத்தைத் தெரிவித்தான்.

"இந்நெறிகளால் பகவானை அடைய முயல்வது அரிது எனவே பெருமானை அடைய முடியாமல் இழந்துவிடநேரிடுமோ!" என்று அர்ச்சுனன் சோகமுடன் நின்றான்.

அவன் சோகத்தைப் போக்குவதற்காகப் பெருமான் எளிதில் பின்பற்றுவதற்குரிய நெறியாக இந்தச் சரமோபாயத்தை அர்ச்சுனனுக்கு அருளிச்செய்தார்.

5) சரம சுலோகத்தின் சிறப்பாவது யாது?

முக்தியடைய விரும்புபவனுக்குரிய தருமங்கள் பலவற்றையும் உபதேசித்து, அத்தருமங்களை நிலைநிறுத்துபவன் பகவான் ஒருவனே!

அந்தப் பகவானே முமுட்சுவை நோக்கி, "மற்ற எல்லாத் தருமங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனையே பற்றுவாயாக!" என்று கூறியதால் இந்தச் சரணாகதி தருமம் பகவானுக்கே உகந்த தருமம் என்பது தெளிவாகிறது.

இதிகாசங்களுள் ஒன்றான பாரதம் ஐந்தாம் வேதம் எனப்படும். இந்தப் பாரதப்பெருங்காவியத்தைச் சார்ந்துள்ளது பகவத்கீதை. இந்தப் பகவத் கீதை உபநிடதம் என்று போற்றப்படும் சாத்திரமாகும். பகவத் கீதையில் காணப்படும் இந்தச் சரம சுலோகத்தில் பிரபத்தி (சரணாகதி) தருமத்தைக் காட்டிலும் மேலான தருமம் ஒன்றுமில்லை என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

பகவானே சேதனனைப் பார்த்து "என்னைப் பற்றிக் கொள்!" என்று கட்டளையிடுகிறார்.

இது மூன்றாவது ரகசியமாகச் சிந்திப்பதற்கு உரியதாக உள்ளது. மேலும், சரமசுலோகம் த்வயத்திற்கு விளக்கம் தருவதாகவும் உள்ளது.

இந்தச் சுலோகத்தின் பொருளைக் கேட்பதற்காகவே உடையவர் பதினெட்டு முறை திருக்கோட்டியூர் நம்பியிடம் எழுந்தருளினார்கள் என்பது வரலாறு.

இவை போன்ற காரணங்களால் சரம சுலோகத்தின் சிறப்பு வெளிப்படும்.

6) திருக்கோட்டியூர் நம்பிகள் உடையவரைப் பலமுறை அலைக்கழிக்கக் காரணம் யாது?

நம்பிக்கை உடையவருக்கும், சிறந்த ஆத்திகராய் உள்ளவருக்கும், ஆர்வம் உடையவருக்கும் மட்டுமே இம்மந்திரப் பொருளை உபதேசிக்க வேண்டும் என்று திருக்கோட்டியூர் நம்பிகள் எண்ணங்கொண்டு, உடையவரைச் சோதித்தறிந்தபிறகே உபதேசிக்க வேண்டும் என்பதற்காகவே நம்பிகள் உடையவரைப் பல முறை அலைக்கழித்தார்.

7) இராமானுசர் சரம சுலோகத்தின் பொருளைப் பலருக்கும் பரக்க உபதேசித்ததன் காரணம் யாது?

சமுசாரிகளிடம் தாம் கொண்ட பரமகருணையால், இம்மந்திரப்பொருளை உடையவர் பலருக்கும் பரக்க உபதேசித்தருளினார்.

கருணை வெள்ளம் கரைபுரண்டோடுகிற உள்ளம் உடையவர் இராமானுசர். எனவே, உலக மக்களின் துன்பநிலையை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

இம் மந்திரப்பொருளின் உயர்வைப் பாராது, மக்கள் படும் துன்பத்தையே பெரிதாகக் கருதி, அவர்கள் கடைத்தேற வேண்டும் என்னும் உயர்ந்த உள்ளத்தாலேயே இம்மந்திரப் பொருளை உடையவர் சாமானிய மக்களுக்கும் உபதேசித்தருளினார்.

8) பிள்ளையுலகாசிரியர் முமுட்சுப்படியை இயற்றுவானேன்?

இராமானுசர் வெளியிட்டருளிய இம்மந்திரப் பொருளை யாவரும் அறிந்துய்ய வேண்டும் என்னும் ஈடில்லாத கருணையாலேயே பிள்ளையுலகாசிரியர் முமுட்சுப்படியை இயற்றியருளினார்.

ஆசிரியர் சரம சுலோகத்தின் பொருளைப் பலருக்கும் தெளிவாக உபதேசம் செய்தருளினார். அதுமட்டுமல்லாமல், கிரந்தங்கள் மூலமாகவும் வெளியிட்டருளியுள்ளார்.

சில நூல்களில் சுருக்கமாகவும், சில நூல்களில் விரிவாகவும் அருளிச்செய்துள்ளார். இவர் அருளிச்செய்த நூல்கள் சிலவற்றுள் ஒன்றே 'முமுட்சுப்படி' என்பது.

இந்நூலில் சரம சுலோகத்

தின் பொருளைக் குறைநத அறி வுடையவரும சிறநத முறையில பெறவேணடும என்னும பெரு நோக்காலேயே எளிய நடையில வெளியிடடருளியுளளார.

மூலம் : 185

“ஜீமே சில உபாய விசே ஷங்களை உபதேசிகக, அவை துர்ச்சகங்களென்றும், ஸவ ரூப விரோதிகளென றும நினைத்து, சோகாவிஷடனான அர்ஜ்ஜுனனைக் குறிதது அவ னுடைய சோக நிவ்ருத்யரதத மாக, ‘இனி இதுக்கு அவவ ருகில்லை’ என்னலாம்படியான சரமோபாயத்தை அருளிசசெய கையாலே, சரமச்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது”.

1) சரம சுலோகம் எனப்பெயர் அமைந்ததன் காரணத்தை விளக்குக.

இந்தச் சுலோகத்தைக் கண் ணன் அருச்சுனனுக்கு உபதேசிக் கும் முன்பாக, தனனை அடை வதற்கு வழிகளாக உள்ள கனம, ஞான, பக்திகளாகிற உபாயங களை விரிவாக உபதேசித் தான். இவற்றைக்கேட்ட அருச சுனன் சோகத்தில் ஆழ்நதுவிட் டான.

“கன்ம, ஞான, பக்திகளாகிற உபாயங்கள் உடலை மெலிவ டையவே செயயும். மேலும், இந்திரியங்களை அடக்குதல் எனபதும அரிது. வெகுகாலம இவ்வுபாயங்களைக் கடைப்பி டித்தால்தான் சித்தி கிடைக்கும். எனவே, இவற்றை மேற்கொள் வது என்பது அரிதே. இந் நெறிகளால இறைவனை அடை தல் என்பது எளிதில் முடியாது. எனவே, பகவானை நாம் இழக்க வேணடியே வரும்!” என்று பல வாறுகச சிநதித்த அருசசுனன சோகக கடலுள் ஆழ்நது விட டான.

அபபோதுதான கணணபெரு மான அருசசுனனுடைய சோகத தைப் போக்க இந்தச சுலோ கததை உபதேசிததருளினார.

சேதனன எளிமையாக முடிக் ககூடியதும, சொரூபத்திற்கு ஏறறதும, இனி இதற்கு மேற் பட்ட உபாயம மறறொன் றிலலை என்னும்படியான பிர பததி மாரககத்தை (சரணுகதி நெறியை) அருசசுனனுக்குப் பக வான போதிததருளினார்.

இச்சரணுகதி நெறி இறுதி உபாயமாயிருத்தலின, இந்நெறி யைத தெரிவிக்கும இச்சுலோ கத்திறகுச சரமசுலோகம என பது பெயராயிறறு.

மூலம் : 186

“இதில, பூர்வாரதத்தாலே அதிகாரி க்ருதயததை அரு ளிச்செய்கிறுன்; உத்தரார்ததத தாலே உபாயக்ருத்யத்தை அரு ளிச்செய்கிறுன்.”

1) இந்தச் சுலோகத்தில காணப்படும் வாக்கியங்களின் பொருள் யாது?

இநதச் சுலோகததின முன வாக்கியம் பிரபத்தி உபாயத திற்கு அதிகாரி (சேதனன) செய்ய வேணடுவன இன்னவை என்பதைக் கூறுகிறது.

பின்வாக்கியம் உபாய பூத னான பெருமான் தன்னைச் சர ணடைந்து நிறகும் சேதனனுக் குத் தான செய்ய வேணடிய செயல்கள் இன்னவை என்ப தைக் கூறுகிறது.

மூலம் : 187

“அதிகாரிக்கு க்ருத்யமாவது - உபாயபரிக்ரஹம”

1) அதிகாரியான சேதனனுடைய செயல்யாது?

பகவானாகிற உபாயத்தைத தனக்கு உபாயமாகப பறறியி ருத்தலே சேதனன் இனறி யமையாது செயய வேணடிய செயலாகும.

மூலம் : 188

“அததை ஸாஙகமாக விதிககி றுன.”

1) எமபெருமானை உபாயமாகப் பற்ற வேண்டும எனபதனை மட்டும் சொல்லாமல், மற்ற உபாயஙகளை விட வேணடும் என்பது பறறியும் கூறியுள்ளது ஏன்?

தன்னை உபாயமாகப் பறற வேணடும எனபதனை, மறற உபாயங்களை விடுதலாகிற அங்கத்தோடு சேர்ததே பக வான் விதித்திருப்பதால, எம பெருமானை உபாயமாகப பற்ற வேண்டும எனபதனை மடடும சொல்லாமல மறற உபாயங் களை விட வேணடும் எனபது பற்றியும் கூறியுள்ளார.

மூலம் : 189

“ராகப்பிராபதமான உபாயந தானே வைதமானால் கடுக பரிக்ரஹிக்கைக்கு உடலாயி ருக்குமிறே.”

1) பெருமானை உபாயமாகப் பற்று தலாகிற பிரபத்தி, விருப்பத்தினா லேயே நடைபெறக் கூடியதாயி ருக்க ‘இதைச் செய்’ என்று விதிக் கவும் வேண்டுமோ? ஏன்?

ஆம. விதிக்கவும் வேண்டும். ஏனெனில, விருப்பமாகச் செய் யக்கூடிய இந்தச் சாதனத்திற்கு ‘இதைச் செய்’ என்று விதியும் ஏற்படுமேயானால், விரைவாகக்

கைபபற்றுவதற்கு இடந்தரு மன்றோ?

நோயாளிககுச சுவையான பாலை மருநதாகக கொள ளுமாறு கூறினால, அநத நோயாளி அநதப்பாலை விரும பியே பருகுவான. 'பருகு' எனறு கட்டளையும இடடுவிட டால, விரைநதும் பருகுவான - விருமபியும பருகுவான "அல் லவா! அது போனறதுதான இதுவும!

2) மூலம 185 முதல் 189 வரை கூறி-யுளளவறறைத தொகுதது வரைக.

"இதறகு மேலே வேறொரு உபாயமும இலலை" எனனு மாறு இறுதி உபாயததை அரு ளிசசெயததமையின, இதறகுச சர மசுலோகம எனனும பெயரமைந தது இநதச் சுலோகத தின முதல வாககியம சேத னன செய்ய வேணடுவனவற றையும, இரணடாம வாககியம இறைவன செயய வேணடுவன வறறையும இயம்புகிறது. சேத னன செய்ய வேணடுவது எம பெருமானை உபாயமாகப பற்ற வேணடும எனபதே! அவவாறு பற்ற வேண்டும் எனபதனை, மறறைய தருமஙகளை விடுத லாகிற அஙகததோடு கூடியே செயயக்கடவன எனபதனைக் கட்டளையாகபபெருமான விதிக கிறான. விருமபிசசெயயககூடிய இவவுபாயததிறகு விதியும ஏற படின, விரைநது மேறகொளவ தறகு இடமும தரும" எனபன வான கருத்துக்கள 185 முதல் 189 வரையுளள மூலஙகளில சொலலபபட்டுளளன.

## மூலம் : 190

"இதில் பூர்வார்த்தம ஆறு பதம்"

1) இந்தச் சரம சுலோகத்தின் முற்கூற-றில் எத்தனை பதங்கள உள்ளன?

இந்த சரம சுலோகததின முறகூற்றில ஆறுபதஙகள உள ளன. அவை ஸரவதரமாந, பரிதயஜய, மாம, ஏகம, சரணம, வ்ரஜ எனனும பதஙகளாம்.

## மூலம் : 191

"ஸர்வதரமாந - எலலா தர மஙகளையும"

1) 'ஸர்வதர்மாந' என்பதன பொருள் யாது?

கர்மம, ஞானம, பகதி முத லான எலலாத தருமஙகளையும எனபது பொருளாம.

## மூலம் : 192

"தரமமாவது பலஸாதநமாயி ருககுமது"

1) தரமமாவது யாது?

இமமை, மறுமை, உமமை (வீடு)ப் பயனகளுள, எதுஎதறகு எதுஎது சாதனமோ அது அது தருமமெனபபடும

## மூலம் : 193

"இஙகுச சொல்லுகிற தரம சபதம தருஷ்டபல ஸாத நஙகளைச சொலலுகையன றிககே, மோக்ஷபல ஸாதநஙக ளைச சொலலுகிறது."

1) 'தரம' எனனும சொல எநதப பய-னுக்குரிய உபாயஙகளைக் குறிக்-கிறது?

இநதச் சுலோகததின் 'ஸர வதரமாந' எனனும பதத்தில உளள தர்ம ஸப்தம மக்கள், பசு, அன்னம முதலிய இம் மைப் பயனகள்; சொர்க்கம் முத லிய மறுமைப்பயன்கள் ஆகி யவற்றுககுரிய சாதனங்களைச் சொலலுவது மட்டுமலலாமல், மோடசமாகிற உமமைப் பயன் களுக்குரிய சாதனங்களான தரு மஙகளையே குறிக்கிறது என் பது வெளளிடை மலையாகும்.

மேலும், பகவான் சரம யோகததை உபதேசிக் கும போதே இமமை மறுமைக ளைப பயனாகச சொல்லாமல, உமமையையே - வீட்டின பேற றையே பயனாகத தெரிவிககி றார.

எனவே, 'தர்ம' எனனும் சொல் வீடு பேறுகிற பயனுக்குரிய உபாஙகளைக குறிக்கிறது என பதை உணரலாம.

## மூலம் : 194

"அவைதான ச்ருதி ஸ்ம்ருதி விஹிதங்களாய்ப பலவாயிருக் கையாலே பஹுவசநப்ரயோகம் பணணுகிறது."

1) 'தரமாந' எனறு பன்மையில் சொல-லபபடடதேன்?

மோடசததை அடைவதற்கு வேணடிய் தருமஙகள வேதம், ஸமிருதி ஆகியவறறால 'செய்' எனக கட்டளை இடப்பட்டவை யாவும், பலவாயும் இருப்பத னால, 'தரமாந' என்று இங்கு பன்மையில சொலலப்பட்டுள் ளது.

(தொடரும்)





பிரமனுடைய மானச புத்திரரகளில ஒருவன தககன இவன சிவபெருமானை எணணித தவஞசெயது, தான உமையமமையாகிய அமபிகையைக குமரியாகப பெறவும, சிவபெருமானை மருமகனாக பெறவும வரம வேணடிப பெறருன. தககன தனககு மகளாகப பிறநத உமாதேவியைத தாட்சாயணி எனப பெயரிட்டு வளரததுச சிவபெருமானுககுத திருமணம செயவிததனன ஒரு முறை தன மகள தாடசாயணியைக காணபதறகாகத திருககைலைககுச என்ற தககன பூதகணஙகளால தடுககபபட்டான அதனால சினமுறற தககன திருமபி வநது, விஷ்ணு முதலான தேவரகளை யாகததலைவராககி ஒரு வேளவிசெயயத தேவர, இருடியர முதலியோரக்குத திருமுகம அனுபபினான. யாகததிறகு வநத இருடிகளில ததீசி முனிவர சிவபெருமானுககு அவி கொடுககுமபடி தககனிடம பலவிதமாககக் கூறியும கேளாமல யாகததை அவன தொடஙகினான. அந்த யாகததில அனைவரையும வரவேறபதும சிவபெருமானை இழிவு செயவதுமே அவன நோககமானது. அதன காரணமாகவே அவரை அவன யாகத்திறகு அழைககவிலலை

### தாட்சாயணியின் நிலை

தநதையாகிய தக்கன செயயும யாகததுக்குப போக விருபபம் கொணட தாடசாயண்ணி தன் கணவரான சிவபெருமானிடம அனுமதி கேட்டாள அந்த யாகம தமமை அவமதிககவே நடததபபடுகிறதென்றும, அழைக்காத இடததிறகுச் சென்றால அவமானமே மிஞசும என்பதையும எடுத்துககூறி அவளைத தடுததார சிவபெருமான. இருநதும் தநதையின பாசததால கட்டுண்ட தாட்சாயணி தன கணவரையும் மீறிக் கொணடு தக்கன் யாகத்துக்கு சென்றாள.

யாகததில் தாட்சாயணியை எவரும வரவேறகவிலலை. அவள வநதிருபபதை விருமபா

# அம்பிகையின் 108 திருத்தலங்களும் நாமங்களும்

டாக்டர் வே.இரா. மாதவன் - தஞ்சாவூர்.

